[22nd August 1960

SRI P. G. MANICKAM: பவானிசாகர் வட்டார அபிவிருத்தித் திட்டத்தின் கீழ் தாளவாடி மலைப் பகுதியில் பாக்கு உற்பத்தி செய்வது பற்றி பரிசீலனையின் விவரம் சர்க்காருக்கு அறிவிக்கப் பட்டதா? அறிவிக்கப்படாவிட்டால், என்ன பரிசீலனை நடந்தது என்று அமைச்சர் அவர்கள் விசாரிப்பார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: விவசாய இலாகாவிலோ அல்லது காட்டிலாகாவிலோ அம்மாதிரி ஒன்றும் யோசனை இல்லை. வேறு தகவல் அரசாங்கத்திடம் இல்லை.

*Beggars*

*271 *Q.*—SRI P. G. MANICKAM: கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) "The Madras Prevention of Begging Act, 1945" எந்தெந்த நகரங்களிலே அமுலில் இருக்கிறது?

(ஆ) இதுவரை எத்தனை பிச்சைக்காரர்கள் பிச்சை எடுப்பதிலிருந்து தடை செய்யப்பட்டார்கள்?

(இ) தடை செய்யப்பட்ட பிச்சைக்காரர்களுக்கு என்னென்ன விதமான உதவிகளும், தொழில்களும் கற்றுக் கொடுக்கப்பட்டு வருகின்றன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) The list [a] of places to which the provisions of the Madras Prevention of Begging Act, 1945, have been extended, is placed on the Table of the House.

(*b*) The particulars are not furnished as the time and labour involved in collecting them from 1945 onwards will not be commensurate with any public interest that is likely to be served.

(*c*) The following handicrafts are tought to the inmates of the Begger Homes in mofussil:—

(1) Spinning.

(2) Weaving.

SRI P. G. MANICKAM: பிச்சைக்காரர்கள் தொல்லை பஸ் ஸ்டாண்டிலும் ரயில்வே நிலையங்களிலும் அதிகமாக இருப்பது பற்றி ஒரு சில நாட்களுக்கு முன்பு நான் ஒரு கேள்வி கேட்ட போது, அமைச்சர் அவர்கள், "கவனிக்கப்படும்; சட்டம் திருத்தி ஒழுங்கு செய்யப்படும்" என்று சொன்னார்கள். இந்தச் சட்டத்தை பஸ் ஸ்டாண்டு, ரயில்வே நிலையங்கள் இவைகளுக்கும் பொருந்தும்படி திருத்த அரசாங்கம் பரிசீலனை செய்யுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இப்பொழுது அமுலில் இருக்கும் சட்டத்தைத் திருத்துவது பற்றி அரசாங்கத்தின் யோசனையில் இருக்கிறது.

---

[a] Printed as Appendix II on page 402 infra.

TRUTH ALONE TRIUMPHS

**22nd August 1960]**

SRI T. S. RAMASWAMY: கன்னியாகுமரி மாவட்டத்திற்கு இதுபற்றி அரசாங்கத்திலிருந்து என்ன சலுகை கொடுக்கப் பட்டிருக்கிறது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: நாகர்கோயிலில் ஒரு "பெக்கர் ஹோம்" வைப்பதாக யோசனை இருக்கிறது.

SRI T. T. DANIEL: May I know whether there is a proposal to extend the Madras Prevention of Begging Act, 1945, to the transferred territory?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: Yes, Sir, all good pieces of legislation will be extended to Kanyakumari.

SRI A. A. RASHEED: Is the Hon. Minister aware that beggars suffering from communicable diseases are still found in the public places? Will the Government at least take steps to isolate these persons suffering from communicable diseases?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: Government have been looking into this matter.

SRI S. RANGANATHA MUDALIYAR: Will the Government extend the provisions of this Act to Tiruttani and Sholingur towns?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: There is no question of extending this Act. The Act applies to those places and action is being taken to round up beggars and take them to the Beggar Home in Kancheepuram, which has been recently started.

SRI A. VEDARATHINAM: குழந்தைகளையாவது பிச்சை யெடுப்பதினின்றும் காப்பாற்றி, அனாதை இல்லங்கள் போன்ற இடங்களுக்கு அனுப்பி, அங்கு அவர்கள் கல்வி பெறுவதற்கான வழி செய்யப்படுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அதற்காக "பாய்ஸ் ஹோம்" என்று சில ஸ்தாபனங்கள் அமைக்கப்பட்டு வருகின்றன. பல நகரங்களிலும், சென்னை நகரத்திலும் அம்மாகிரி அமைக்கப்பட்டிருக்கிறது. அந்த வகையிலே குழந்தைகளைப் பாதுகாக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் கவனம் செலுத்தப்பட்டு வருகிறது.

SRI N. MARUDACHALAM: ஒவ்வொரு ஜில்லாவிலும் எத்தனை பிச்சைக்காரர்கள் இருக்கிறார்கள் என்று கணக்கிடப் பட்டிருக்கிறதா? அப்படியில்லை யென்றால், அந்தந்த ஜில்லாக் கலெக்டர்களுக்குச் சொல்லி, பிச்சைக்காரர்களின் கணக்கை எடுத்து, அவர்களை வேலையில் அமர்த்துவதற்கான ஏற்பாட்டை அரசாங்கம் செய்யுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: பிச்சைக்காரர் களைப் பிடித்து அவர்களுக்கு வேலை கற்றுக் கொடுப்பதற்கும், வயோதிகர்கள், வேலை செய்ய இயலாதவர் போன்றவர்களுக்கும்

தனித்தனியாக "ஹோம்" வைத்து நடத்தப்படுகிறது. மொத்தம் எத்தனை பிச்சைக்காரர்கள் இருக்கிறார்கள் என்பது இப்பொழுது கணக்கெடுக்கவில்லை.

SRI S. M. ANNAMALAI: பிச்சைக்காரர்கள் அதிகமாவதற்குக் காரணமென்ன? அந்தக் காரணத்தைச் சர்க்கார் பரிசீலனை செய்யுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: பிச்சைக்காரர்கள் அதிகம் ஆவதற்கு வறுமை மட்டும் காரணமல்ல என்று சர்க்காருக்குத் தெரியும்.

SRI V. SUBBIAH: இந்தவிதப் பிச்சைக்காரர்களில் நோயுற்றவர்கள், குஷ்ட ரோகம் போன்ற வியாதியுடையவர்கள், அங்கஹீனர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கென்று தனிக் காலனி அமைத்து அவர்களைச் சமுதாயத்திலிருந்து ஒதுக்கி வைக்க ஏதாவது அரசாங்கத்திற்கு திட்டம் இருக்கிறதா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: பிச்சைக்காரர்கள் நிவாரணத்தைப் பற்றி அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக் கொள்ளும்போது இந்த வேலையும் அரசாங்கத்தின் பிரத்தியேகமான பரிசீலனையில் இருக்கிறது. நடவடிக்கை எடுத்துக் கொண்டுதான் வருகிறார்கள்.

*Land erosion*

*272 Q.—SRI P. G. MANICKAM: கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கோயமுத்தூர் ஜில்லா, கோபிசெட்டிப்பாளையம் தாலூகா, தாளவாடி மலைப் பிரதேசத்திலே மண் அரிப்புத் திட்டத்திற்காக ஒதுக்கப்பட்டிருக்கும் தொகை எவ்வளவு?

(ஆ) அவ்விடத்தில் எத்தனை ஏக்கரா நிலங்கள் மண் அரிப்பினால் பாதிக்கப்பட்டிருக்கின்றன?

(இ) 1960–61-ம் வருடத்தில் ஒதுக்கப்பட்டிருக்கும் தொகை மூலமாக எத்தனை ஏக்கரா நிலங்களிலே மண் அரிப்புத் திட்டம் அமுலாக்கப்படும்?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (a) Nil, for the year 1960–61.

(b) Not available.

(c) Nil, Sir.

*Water-diviners*

*277 Q.—SRI P. G. MANICKAM: கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நீரூற்றுகளைக் கண்டுபிடித்து விவசாயத்துக்கான கிணறுகளைத் தோண்டுவதற்காக அரசாங்க மூலமாக "நீரூற்றுக் கண்டுபிடிக்கும் நிபுணர்கள்" நியமிக்கப்பட்டிருக்கிறார்களா?